

# தவளையும் வேற்றாளும்

மேக்ஸ்

# தவளையும் வேற்றாளும்

மேக்ஸ்





ஒரு நாள், ஒரு வேற்றாள் வந்து காட்டுக்கு
அருகில் தனது கூடாரத்தை அமைத்தார்.
பன்றி தான் முதலில் அவரைப் பார்த்தது.



பன்றி தனது நண்பர்களான வாத்தையும் தவளையையும் சந்தித்த போது பரபரப்புடன் கேட்டது, "நீங்கள் அந்த ஆளைப் பார்த்தீர்களா?“.

"இல்லையே. ஆள் எப்படி?" என்று வாத்து கேட்டது.

"என்னைக் கேட்டால், அவர் ஒரு அசிங்கமான அழுக்கு எலி போல் இருக்கிறார், எதற்கு இங்கு வந்திருக்கிறார் என்று தெரியவில்லை." என்றது பன்றி.

வாத்து சொன்னது "நாம் எலிகளைப் பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும், திருட்டு எலிகள்.".



"அது உங்களுக்கு எப்படி தெரியும்?" என்று தவளை கேட்டது.

"எல்லோருக்கும் தெரிந்தது தான் இது" என்று சீறியது வாத்து.

ஆனால் தவளை அதை நம்பவில்லை. தானே நேரில் காண விரும்பியது. அன்று இரவு, இருட்டிய பிறகு, தூரத்தில் ஒரு சிவப்பு வெளிச்சத்தைக் கண்டது. தவளை மெதுவாக அதை நோக்கி சென்றது

காட்டின் அருகில் துணியால் செய்யப்பட்ட ஒரு கூடாரத்தைக் கண்டது

அந்த வேற்றாள் தீ மூட்டி உணவு சமைத்துக் கொண்டிருந்தான். அருமையான மணம் கமழும் சுகமான அந்த சூழல் தவளையின் மனத்தைக் கவர்ந்தது.

மறுநாள் தவளை மற்றவர்களிடம் சொன்னது "நான் அவரைப் பார்த்தேன்".
"அப்புறம்?" கேட்டது பன்றி.
"அவர் மிக நல்லவராய் தெரிகிறார்," என்றது தவளை.



பன்றி "ஜாக்கிரதை! அவர் ஒரு அழுக்கு எலி என்பதை மறந்து விடாதீர்கள்." என்று எச்சரித்தது.
"ஒரு வேலை கூட செய்யாமல் நம் அனைவரது உணவையும் அந்த திருட்டு சோம்பேறி எலி தின்றுவிடும் என்று நான் பந்தயம் கட்டுகிறேன்" என்றது வாத்து.



ஆனால் உண்மையில் எலி எப்போதும் சுறுசுறுப்பாக இருந்தது. மரத்தினாலான ஒரு மேஜையையும் பெஞ்சையும் திறம்பட உருவாக்கியது. அப்படி ஒன்றும் அழுக்காகவும் இல்லை. ஆனால் என்ன, அடிக்கடி ஆற்றில் குளித்தாலும் எப்போதும் கொஞ்சம் அவலட்சணமாக காணப்பட்டது.



ஒரு நாள், தவளை எலியை சந்திக்க சென்றது. எலி தான் செய்த புதிய பெஞ்சில் அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது.
"ஹலோ நான் ஒரு தவளை" என்றது தவளை.
எலி சொன்னது " நீ தவளை என்று எனக்கு தெரியும். நான் முட்டாள் அல்ல. ஆங்கிலம், பிரஞ்சு மற்றும் ஜெர்மன் ஆகிய மூன்று மொழிகளில் எனக்கு எழுதப் படிக்க தெரியும்.“
புத்திசாலி முயலுக்கு கூட இத்தனை மொழிகள் தெரியாது என்பதால், தவளை எலியால் பெரிதும் கவரப்பட்டது.



அப்போது அங்கு வந்து சேர்ந்த பன்றி "உனக்கு எந்த ஊர்?" என்று எலியிடம் கோபமாக கேட்டது.
"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று எலி அமைதியாக பதிலளித்தது.
"ஓஹோ! அப்படியென்றால் உனக்கு இங்கு வேலையில்லை. கிளம்பு" என்று பன்றி கத்தியது.
எலி அமைதியின் வடிவமாய் பார்த்தது.

எலி கூறியது "நான் உலகம் முழுவதும் பயணம் செய்திருக்கிறேன். இந்த இடம் ஆற்றின் கரையில் அழகாகவும் அமைதியாகவும் இருக்கிறது. என் மனதிற்கு மிகவும் பிடித்திருக்கிறது."



"நீ தான் என் மரத்தை திருடியிருக்கிறாய் என்று நினைக்கிறேன்" என்று குற்றம் சாட்டியது பன்றி. எலி மென்மையான குரலில் சொன்னது "இந்த காடு அனைவருக்கும் சொந்தமானது. மரத்துண்டுகளை நான் கண்டெடுத்தேன்“

"சொறிபிடித்த எலி!"முணுமுணுத்தது பன்றி .

எலி வேதனையுடன் "ஆமாம் எல்லாம் என் தவறு. எல்லாவற்றிற்கும் எப்போதும் எலிகளே குற்றம் சாட்டப்படுகின்றன.“என்றது.



தவளையும், பன்றியும், வாத்தும் முயலைச் சந்திக்கச் சென்றன.

"அந்த அருவறுப்பான எலி இந்த இடத்தை விட்டு வெளியேற வேண்டும்," என்றது பன்றி.

"எலிக்கு அங்கே இருக்க உரிமை இல்லை. அது விறகுகளைத் திருடுகிறதோடு மட்டுமில்லாமல் காட்டுமிராண்டித்தனமாக நடந்துகொள்கிறது" என்று வாத்து கத்தியது.

"அமைதி! அமைதி! எலி பார்க்க வித்தியாசமாக இருக்கலாம், ஆனால் அது எந்த தவறும் செய்யவில்லை, காடு அனைவருக்கும் சொந்தமானது தானே!." என்றது முயல்.



அன்று முதல், தினமும் தவளை எலியைச் சந்தித்தது. அவர்கள் பெஞ்சில் அருகருகே அமர்ந்து இயற்கை காட்சிகளை ரசித்தனர். எலி பல நாடுகளில் பயணித்து தான் பெற்ற மெய்சிலிர்க்கும் அனுபவங்களைப் பற்றிய கதைகளை தவளையிடம் பகிர்ந்துகொண்டது.



பன்றி தவளையைக் கண்டித்தது."நீ அந்த அழுக்கு எலி வீட்டுக்குச் செல்லக்கூடாது," என்றது.
"ஏன் போகக்கூடாது?" என்று கேட்டது தவளை. "ஏனென்றால் அது நம்மைப் போலில்லை வித்தியாசமானது" என்றது வாத்து.
"வித்தியாசமானதா? நாம் அனைவருமே ஒருவருக்கொருவர் வித்தியாசமாக தானே இருக்கிறோம்."என்று கேட்டது தவளை.
"இல்லை இல்லை. நாம் எல்லாம் ஒரு குடும்பமாய் இருக்கிறோம். எலியோ வெளியூர்க்காரன்.“ என்று வாத்து மறுத்தது.





பின்னொரு நாள், பன்றி சமைக்கும் போது கொஞ்சம் கவனக்குறைவாக இருந்ததால் பெரியதாக தீப்பிடித்துவிட்டது. விரைவில் தீ பரவி, பன்றியின் வீடு பற்றி எரிய ஆரம்பித்தது.

பன்றி பயத்தில் வெளியே ஓடி கூச்சலிட்டது.
"காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள் !!"
ஏற்கனவே அங்கு வந்துவிட்ட எலி, ஆற்றில் இருந்து வாளிகளில் நீரை கொண்டு வந்து, தீ அணையும் வரை போராடியது.





பன்றியின் வீட்டுக் கூரை முற்றிலுமாக எரிந்து போய்விட்டது. எல்லா விலங்குகளும் திகைத்துப்போய் நின்றன.
பன்றி தனக்கு வீடு இல்லையே என்று கவலைப்பட தேவையே இல்லாமல் அடுத்த நாள், எலி சுத்தியலும் ஆணிகளும் கொண்டு வந்து உடனடியாக வீட்டின் கூரையை சரிசெய்தது!

ஒரு நாள் முயல் தண்ணீர் எடுக்க ஆற்றுக்குச் சென்ற போது திடீரென்று வழுக்கி ஆழமான நதியில் விழுந்துவிட்டது. முயலுக்கு நீந்தவும் தெரியாது."உதவி உதவி!" என்று சத்தம் போட்டது முயல்.
முயலின் அலறல் சத்தம் கேட்டு எலி உடனடியாக நதிக்குள் பாய்ந்தது. முயலை மீட்டு, பாதுகாப்பாக கரைக்கு கொண்டு வந்து சேர்த்தது.

இப்போது அனைவரும் எலி தங்களுடன் வாழலாம் என்று ஒப்புக்கொண்டனர். எலி மிகவும் மகிழ்ச்சியாகவும் உற்சாகமாகவும் இருந்தது. யாருக்காவது உதவி தேவைப்பட்டால், எலிதான் முதல் ஆளாய் அங்கு நிற்கும்.

ஆற்றங்கரை விருந்து, காட்டுக்குள் சுற்றுலா போன்ற ஏற்பாடுகளைச் செய்து மற்ற விலங்குகளுடன் எலி உல்லாசமாக பொழுதைக் கழித்தது.



மாலைப் பொழுதுகளில் சீனாவின் டிராகன்களைப் பற்றிய திகிலூட்டும் கதைகளையும், உலகத்தில் தான் சந்தித்த பல சுவாரஸ்யமான விஷயங்களை பற்றியும் எலி அவர்களிடம் சொல்லும். அந்த ஆனந்தமான காலகட்டத்தில், எலியிடம் எப்போதும் சொல்ல தயாராக புதிய கதைகள் ஏராளம் இருந்தன.

ஒரு நாள் தவளை எலியைச் சந்திக்கச் சென்றபோது, அதன் கண்களை நம்ப முடியவில்லை. எலியின் கூடாரம் தரையில் பிரித்துக் கிடந்தது, எலி தன் பையுடன் அங்கே நின்று கொண்டிருந்தது.



"நீ எங்கே கிளம்புகிறாய்?" என்று தவளை திகைத்துப்போய் கேட்டது.
"ஆம், மறுபடியும் பயணம் செய்யவேண்டிய நேரம் வந்துவிட்டது. நான் இதுவரை பார்த்திராத அமெரிக்காவிற்கு போகப் பொகிறேன்." என்றது எலி.
இதைக் கேட்டு தவளை நிலைகுலைந்து போனது.

அருவறுப்பான அழுக்கான, ஆனால் நல்ல மனதுள்ள, புத்திசாலித்தனமும் பிறருக்கு உதவும் தன்மையும் கொண்ட எலி அங்கிருந்து கிளம்பியது. கண்பார்வையிலிருந்து எலி மறைவது வரை பார்த்துக்கொண்டே இருந்தன அதன் நண்பர்கள்.



கண்களில் கண்ணீர் மல்க, தவளை, வாத்து, முயல், பன்றி எல்லாம் தம் நண்பன் எலிக்கு விடைகொடுத்தன. "ஒருவேளை ஒரு நாள் திரும்பி வந்தால், நான் ஆற்றின் மீது ஒரு பாலம் கட்டுவேன்." என்றது எலி உற்சாகமாக.

முயல் பெருமூச்சுடன் "இந்த எலியை நம்மால் மறக்கவே முடியாது" என்றது. ஆமாம், எலி ஒரு வெறுமையை விட்டுச்சென்றது. ஆனால் அதனுடைய பெஞ்ச்சில் நண்பர்கள் நான்கு பேரும் ஒன்றாக உட்கார்ந்து எலியைப் பற்றிய நினைவுகளைப் பேசித் தீர்த்தனர்.

முற்றும்



ஒரு வேற்றாள் காட்டுக்கு வரும்போது, தவளையின் நண்பர்கள் அவரை சந்தேகத்துடன் பார்க்கிறார்கள். எலி அழுக்காகவும் திருடனாகவும் இருக்கும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் தவளை இதை ஏற்கவில்லை. உண்மையை கண்டுபிடிக்க முடிவு செய்து எலியுடன் நட்பை உருவாக்குகிறது. பின்னர் எலி பல அவசர காலங்களில் மற்றவர்களுக்கு உதவி செய்கிறது. முடிவில், வித்தியாசமான தோற்றமுடைய விலங்கும் மிகவும் அழகாகவும் உன்னதமாகவும் இருக்க முடியும் என்பதை மற்றவர்கள் புரிந்துகொள்கிறார்கள்!

மேக்ஸ் பல விருதுகள் பெற்ற ஒரு எழுத்தாளர், அவரது கதைகள் வாழ்வின் அடிப்படை கொள்கைகளை மென்மையான நகைச்சுவையுடன் தொட்டுச் செல்கின்றன.